REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

**நிம்மதி**

தொழிற்சாலைகளில் உழைக்கும் தொழிலாளர்கள் மனநிம்மதியுடன் வாழ்ந்தால் தான் தொழிலதிபர்கள் வாழமுடியும்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம். ஜி. ஆர்

**வாக்குறுதி**

சொன்ன வாக்குறுதியைக் காப்பாற்றாதவர்களும் வாங்கிய கடனைக் கொடுக்க மறுப்பவர்களும் ஒரே இனமாவார்கள்.

-அண்ணல் காந்தி

மலர்: 4 சென்னை 28—10—1979 ஞாயிறு (★) ❋ ● ❋ (★) வெளியூர் 29-10-1979 திங்கள் இதழ்: 12

தி.மு.க. தொண்டர்கள்

எல்லோரும் என்னை விட்டுவிட்டு போகிறார்களே!

தி.மு.க. தொழிற் சங்கங்கள் கூண்டோடு கலைப்பு

கபாலி விலகல் 2000 பேர் கழகத்தில் சேர்ந்தனர்

★ சங்கம் நடத்துவோர் கோரிக்கைகளை உயர்த்தினால் வரிப் பணத்துக்கு எங்கே போவது?

★ கோஷம் போடுவோரை எதிர்க்கட்சிகள் ஆதரிப்பதால் பொதுமக்களுக்கான திட்டங்கள் பாதிப்பு

# சட்டசபை நேரத்தைப் பாழடிக்கும் தி. மு. க.

## பார்வர்டுபிளாக் தலைவர் கந்தசாமி கண்டனம்

சென்னை, அக். 28-எதிர்க்கட்சியினர் கொண்டு வந்திருக்கும் கண்டனத் தீர்மானம் தேவையற்றது-அவசியமற்றது என்று இந்திய தேசிய பார்வர்டு பிளாக் கட்சித் தலைவர் கே. கந்தசாமி, கண்டனத் தீர்மானத்தைக் கடுமையாக எதிர்த்துப் பேசினார். ஒவ்வொரு கூட்டத்தொடரிலும் இப்படி நேரத்தை வீணடிக்கலாமா என்றும் அவர் வினவினார்.

6 கட்சிகள் ஆதரிக்காத தி. மு. க. கொண்டு வந்துள்ள கண்டன தீர்மானத்தை எதிர்த்து சட்டமன்றத்தில் தேசிய பார்வர்டு பிளாக் தலைவர் கந்தசாமி பேசினார்.

கந்தசாமி பேசியதாவது:

ஜனநாயக மரபில் எதிர்க்கட்சியினர் அரசின் நடவடிக்கைகளைக் கண்டிப்பதும், ஆலோசனை கூறுவதும் வரவேற்கக் கூடியது ஆகும். ஆனால் இந்தக் கண்டனத் தீர்மானம் அவசியமா என்றால் அவசியம் இல்லை என்றுதான் சொல்வேன்.

அரசின் நல்ல திட்டங்களை ஆதரிப்பதும், வேண்டிய நேரத்தில் கண்டிப்பதும் ஜனநாயக மரபு.

ஆனால் சட்டமன்றம் கூடுகிற ஒவ்வொரு நேரத்திலும் நம்பிக்கையில்லா தீர்மானம் அல்லது இப்படி கண்டன தீர்மானம் கொண்டு வருவது சரியல்ல.

### கண்டனத் தீர்மானம் தேவையற்றது

இதுபோன்ற தீர்மானங்களால் 3-4 நாட்கள் விவாதம் அவசியமா?

இப்படி நேரத்தை வீணாக்குவதுதேவைஇல்லை என்று நாங்கள் கருதுகிறோம்.

பல மசோதாக்கள் விவாதத்திற்குவருகின்றன அந்த சமயங்களில் சொல்ல வேண்டியஆலோசனைகளைச் சொல்ல வசதி இருக்கிறது.

இங்கே 20-25 கண்டன தீர்மானங்களைக்கொடுத்து இருக்கிறார்கள்.

இவைகள் எல்லாம் அரசைக்கண்டிப்பது தான் சாராம்சம் என்றாலும் எதிர்க்கட்சியின் எண்ணத்தைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது.

இன்ன இன்ன காரியங்களில் அரசு தவறி இருக்கிறது என்று ஆக்கபூர்வமான ஆலோசனைகளைக் கூறுவது கடமை.

தொழிலாளர்கள், விவசாயிகள், காவல்துறையினர்,மாணவர்கள், என், ஜி. ஓ. இப்படி ஒவ்வொருவரும் போராட்டம், ஊர்வலம் நடத்துவதும் இதற்கு எதிர்க்கட்சிகள் ஆதரவு தருவது என்பதும் சரியா?

இவர்கள் கோரிக்கைகளைச் சொல்லிக் கொண்டே போனால் இதற்கு வரிப்பணத்தை எங்கே தேடுவது?

ஜனநாயகத்தில் இவர்களின் வாக்குகளைப் பெற அவர்கள் செயல்கள் அனைத்தையும் ஆதரிக்கும் நிலை இருக்கிறது.

காவல்துறையினர்வேலை நிறுத்தம் 10 நாட்களாக நடந்து வருகிறது.

ராஜாஜி முதலமைச்சராகயிருந்தபோது இவர்களுக்கு சங்கம் அவசியம் இல்லை என்று முடிவு செய்தார்.

அந்த முன் உதாரணத்தைப்பின்பற்றி நாம்அவர்கட்கு சங்கம் வைக்க உரிமை வழங்கக் கூடாது என்று கூறினேன்.

### வரம் கொடுத்தவன் தலையில்...

ஆனால் அவர்களுக்கு அந்த உரிமையை முதல்வர் வழங்கினார். புராணத்தில் ஒருகதை உண்டு,

பத்மாசுரனுக்குஈஸ்வரன் ஒரு வரம் கொடுத்தான். யார் தலையில் கைவைத்தாலும் அவர் சாம்பலாக வேண்டும் என்பது அந்த வரம்.

அந்த வரத்தைப் பெற்ற பத்மாசுரன் ஈஸ்வரன் தலையிலேயே கை வைக்க முற்பட்டான்.

ஈஸ்வரன் சாம்பலாகி விட்டால் அந்த இடத்தில் தான் அமரலாம் என்று நினைத்தான். ஈஸ்வரன் ஓடினார். அப்போது கண்ணன் மோகினி அவதாரம் எடுத்து பத்மாசுரனை மயக்கினார்.

தலை குளித்து வா என்று கண்ணன் சொல்ல அங்கே இருந்த கொஞ்ச தண்ணீரை எடுத்து தலையில் தடவ அவனை இறந்தான். ஈஸ்வரன் காக்கப் பட்டார்.

அது போல காவல் துறையினர் கேட்ட வரம் தரப்பட்டதும் போராட்டம் நடத்துகிறார்கள்.

திருப்பரங்குன்றத்தில் ஒரு வக்கீல் தாக்கப்பட்டபோது நான் உட்பட அனைவரும் காவல் துறையினரைத் தாக்கிப்பேசினோம்,

அப்போது அவர்களுக்காகப் பரிந்து பேசியவர் முதலமைச்சர் ஒருவர் தான்.

இதை நான் முதல்வரிடம் குறிப்பிட்டேன். தனக்கு இதுவும் வேண்டும் இன்னமும் வேண்டும் என்று அவர் வேதனையுடன் கூறினார்.

என்னையே விரோதியாகப் பேசுகிறார்களே என்று மனம் வருந்தியபடி கூறினார்.

அன்று ஈஸ்வரனைக் காக்க கண்ணன் வந்தான் இன்று முதல்வரைக் காக்க மக்கள் காத்திருக்கிறார்கள்

காவல் துறையினருக்கு சங்கம் வைத்துக் கொள்ள அனுமதி தந்தது சரியல்ல. நாட்டைக் காக்க வேண்டியவர்கள் ஆயுதம் எடுத்து போராட்டம் நடத்தினால் நாட்டு நிலை என்ன ஆகும்?

### சங்க அனுமதி தவறு

ஆகவே அவர்களுக்கு சங்கம் வைக்க அனுமதி தந்தது தவறு.

(ஆளும் கட்சியினர் பலத்த கைதட்டல்)

இந்த அநியாயத்தை தாங்க முடியாது.

சங்கம் வைத்தால் தான் வாழமுடியும் என்றால் சங்கம் வைக்க முடியாத விவசாயிகள் எங்கே போவார்கள்?

இப்படி ஒவ்வொருவரும் கோரிக்கைகளை உயர்த்திக் கொண்டே போனால் கடைசியில் பட்ஜெட்டில் இவர்களுக்குத்தான் செய்ய முடியும்.

மக்களுக்காக எந்த நன்மையையும் செய்ய முடியாது.

ஒவ்வொருவரும் சங்கம் வைப்பது, அதற்கு அரசியல்கட்சிகள் ஆதரவு தருவது என்றால் நாட்டில் எப்படி அமைதி இருக்கும்?

மக்களுக்கு க்ஷேமநலதிட்டங்களை செயல்படுத்த முடியுமா? வறுமையை ஒழிக்க முடியுமா?

விவசாயிகளுக்கு இந்த அரசு ரூ. 40 கோடி சலுகை தந்து இருக்கிறது. இதற்காக ஒரு வார்த்தை பாராட்ட வேண்டாமா?

விவசாய சங்கத்தினர் என்னைக் கூட பயமுறுத்தி மிரட்டி உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டார்கள்

நான் கூட அதனால் 4

(1-ம் பத்தி பார்க்க)

சினிமா செய்திகள்

4-ம் பக்கம்

★ தேர்தல் நெருங்குவதால் கருணாநிதி கும்பலின் கொலைவெறி உச்ச கட்டம்

★ சென்னையில் தி. மு. க. பேர்வழிகள் நடத்திய படுபயங்கர அராஜகச்செயல்

# கழகத் தோழர் வெட்டிக் கொலை

## ஓட ஓட துரத்திக் கொன்ற கொடுமை: ஆவடி,பூங்கா நகரிலும் தி மு க.வெறிசெயல்கள்

சென்னை, அக். 28- நாடாளுமன்றத் தேர்தல் தேதி அறிவிக்கப்பட்டதைத் தொடர்ந்து "தேர்தல் கிலி" கொண்ட தி. மு. க. வெறியர்களுக்கு கழக அடலேறு பலியானார். திருமணம் ஆகி 6 மாதமே ஆன கழகத்தோழரை தி. மு. க. காலி வெட்டிக் கொலை செய்தான்.

சென்னை ராயபுரம் காளிங்கராய முதலி தெரு முதல் சந்து பகுதியில் வசித்தவர் கழகத்தோழர் தமிழ்வாணன். வயது 23. இன்று (28-ந்தேதி) ராயபுரம் 15வது வட்டத்தில் நடைபெற இருந்த கூட்டத்தில் அமைச்சர் கே. ஏ. கே. தலைமை நிலைய செயலாளர் அப்துல்காதர் ஆகியோர் பேச இருந்தனர்.

இதற்கான சுவரொட்டிகளை ஒட்டும் பணிகளில தமிழ்வாணனும் மற்றும் கழகத் தோழர்களும் நேற்று இரவு தீவிரமாக ஈடுபட்டிருந்தனர்.

அப்போது அந்தப்பகுதியிலுள்ள தி. மு. க. காலி தங்கையன் என்பவர் குடிபோதையில் வந்து, சுவரொட்டிகளைக் கிழித்தார்.

இதைக் கண்ட தமிழ்வாணனும் மற்ற தோழர்களும் "அதை ஏன் கிழிக்கிறாய்? இது நியாயமா?" என்று கேட்டார்கள்.

குடிபோதையிலிருந்த கருணாநிதி சீடன், ஆவேசம் வந்தவனாக, கழகத் தோழர்களை வாயில் வந்தபடி திட்டினான்.

உடனே கழகத் தோழர்கள் காவல்துறையினரிடம் புகார் கொடுத்தார்கள்.

இன்று காலை தமிழ்வாணன் டீக்கடையில் டீ குடித்துக்கொண்டிருந்தபோது தி. மு. க. காலி தங்கையன், அரிவாளை எடுத்துக்கொண்டு தமிழ்வாணனை ஓட ஓட விரட்டி கழுத்தில் வெட்டினார்.

வெட்டுப்பட்ட தமிழ்வாணன் ரத்த வெள்ளத்தில் விழுந்தார்.

உடனே அவரை கழகத் தோழர்கள் ஸ்டான்லி ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றனர். வழியிலேயே தமிழ்வாணன் இறந்தார்.

தொகுதி அமைப்பாளர் தாஸ், இச்சம்பவம் பற்றி போலீசில் புகார் செய்தார்.

பிணம் பரிசோதனைக்காக அனுப்பப்பட்டது.

தகவல் அறிந்ததும் தலைமை நிலையச் செயலாளர் அப்துல் காதரும், வண்ணை பாண்டியன்,மது

(2 ம் பக்கம் பார்க்க)

## மேலவை மாற்றுத் தலைவர்கள்

சென்னை, அக். 28- மேலவை மாற்றுத்தலைவர்களின் பட்டியலை மேலவைத் தலைவர் ம. பொ. சி. அறிவித்தார்.

சட்டமன்ற மேலவை விதிகள் 6-ன்படி டாக்டர் இரா. ஜனார்த்தனம், பி. எலமந்தா, லட்சுமி காந்தன், மந்தாகினி கிருஷ்ண மூர்த்தி ஆகியோர் மாற்றுத் தலைவர்களாக இருப்பர் என்று ம.பொ.சி. அறிவித்தார்

( 8ம் பத்தி தொடர்ச்சி)

மாதம் மின்சாரக் கட்டணம் கட்டாமல் இருந்தேன். மின்சாரக் கட்டணத்தைக் கட்டினால் மோட்டாரை எரித்து விடுவோம் என்றார்கள்.

இதையெல்லாம் முதல்வரிடம் சொல்லி இருக்கிறேன்.

இவ்வாறு கந்தசாமி கூறினார்.

## மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சி. இலங்கை செல்கிறார்

சென்னை, அக். 28-சட்ட மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சி. அடுத்த மாதம் 1 ந் தேதி இலங்கைசெல்கிறார். ஐந்து நாட்கள் இலங்கையில் சுற்றுப்பயணம்மேற்கொள்கிறார்.

மறைந்த திரைப்பட இயக்குநர் ஏ.பி.நாகராஜனின் மகன்வெங்கடசாமிக்கும், இலங்கையில் பிரபல தொழிலதிபரான கே. தர்மலிங்கத்தின் மகள் சந்திரலேகாவுக்கும் நவம்பர் 2-ந் தேதி இலங்கையில் உள்ள கொழும்பு நகரில் திருமணம் நடக்கிறது.

இந்த திருமணத்தில் பங்கேற்பதற்காக மேலவைத் தலைவர் டாக்டர் ம. பொ. சி. இலங்கை செல்கிறார். நவம்பர் 1-ந் தேதி இலங்கைக்கு பயணமாகிறார். ஐந்து நாட்கள் அங்கு தங்கியிருந்து பல இடங்களுக்குச் சுற்றுப் பயணம் மேற்கொள்கிறார்

கொழும்பு, கண்டி போன்ற நகரங்களில்நடக்கும்பல இலக்கியக் கூட்டங்களில் டாக்டர் ம. பொ.சி. கலந்துகொண்டு பேசுகிறார். நவம்பர் 5-ந் தேதிசென்னைக்குத்திரும்புகிறார்.

## தென்கொரிய ஜனாதிபதி சுட்டுக்கொலை

சியோல், அக். 28 தென்கொரியாவில் திடீரென்று ராணுவப் புரட்சி ஏற்பட்டது. ராணுவ உயர் அதிகாரி ஒருவருக்கும் ஜனாதிபதி பார்க்சுங் ஹி ஆகியோருக்குமிடையே கடும் துப்பாக்கி சண்டை ஏற்பட்டது. ஜனாதிபதி பார்க்கின் மெய்க்காப்பாளர் சா-ச சோல் என்பவரும் ஜனாதிபதியை பாதுகாக்க ராணுவ அதிகாரியுடன் கடுமையாகச் சண்டை போட்டார். ராணுவ அதிகாரியின் துப்பாக்கி குண்டு பார்க்கின் நெஞ்சைத் துளைத்தது. அவர் மரணமடைந்தார். மெய்க்காப்பாளர் உட்பட 5-பேர் கொல்லப்பட்டனர்.

இந்த ராணுவப் புரட்சியைத் தொடர்ந்து ஆட்சி கைமாறியது. பிரதமர் சோய் கியூஹா தற்காலிக ஜனாதிபதியாக நீடிப்பார் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## அரசு உத்தரவை மீறிய அதிகாரிகள் மீது நடவடிக்கை

சென்னை, அக். 28- ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர்கள் ஊதியத்தை மறு நிர்ணயம் செய்யக்கூடாது என்று அரசு உத்தரவிட்டிருந்தும் அதை மீறிய அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக அமைச்சர் காளிமுத்து மேலவையில் தெரிவித்தார்.

கேள்வி நேரத்தின் போது அமைச்சர் காளிமுத்து பதிலளித்துக் கூறியதாவது:

திருப்பத்தூர், கடம்பத்தூர், ஆகிய ஊராட்சி ஒன்றியங்களில் நடுநிலைப்பள்ளித் தலைமை ஆசிரியர்களின் ஊதியம் மறுநிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

கடம்பத்தூர் ஊராட்சி ஒன்றிய ஆணையர் மீது திருவள்ளூர் கோட்ட வளர்ச்சி அலுவலரும் திருப்பத்தூர் ஊராட்சி ஒன்றிய ஆணையர் மீது வட ஆற்காடு மாவட்ட ஆட்சியரும், இது சம்பந்தமாக ஒழுங்கு நடவடிக்கை எடுத்து வருகின்றனர்.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து மேலவையில் கூறினர்.

## நர்சரி பள்ளிகளில் தமிழ் கட்டாய பாடம்

சென்னை, அக். 28 மேலவையில் கேள்வி நேரத்தில் அமைச்சர் அரங்கநாயகம் பதிலளித்துகூறியதாவது:-

19 8 ம் ஆண்டு ஏப்ரல் மாதம் வரை 20 நர்சரி பள்ளிகள் அங்கீகாரம் பெற்றுள்ளன. 1976-ம் ஆண்டுவரை 406 அங்கீகாரம் பெருத நர்சரி பள்ளிகள் உள்ளன.

இந்த பள்ளிகளில் 97 ஆயிரத்து 274 குழந்தைகள் படிக்கின்றன.

நர்சரி பள்ளிகளை கிராமப்புறங்களில் ஆரம்பிப்பவாகளை அரசு ஊக்குவித்து வருகிறது.

நர்சரி பள்ளிகளில் தமிழ் கட்டாயமாக கற்றுத்தர வேண்டும் என்று நடவடிக்கை எடுக்கப்படும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினர்.

## மாயூரம் தவப்புதல்வன் கலைக்குழு கலைப்பு

மாயூரம், அக். 28 மாயூரம் நகரசிவாஜிரசிகர் மன்றப் பிரச்சினைகள் குறித்துபலமுறைஎடுத்துக் கூறப்பட்டும் அதுகுறித்து நடவடிக்கை எடுக்கப்படாத காரணத்திஞல் கடந்த 12 வருடங்களாக செயல்பட்டு வந்த தவப்புதல்வன் கலைக்குழு கலைக்கப்பட்டுள்ளது என்று கலைக்குழு தலைவர் பி. சுகுமார் ராயன் கூறியுள்ளார்.

## மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வருக்கு நாஞ்சிலார் பாராட்டு

சென்னை, அக் 28- மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. டாக்டர் பட்டம் பெற்றதற்காக நிதியமைச்சர் நாஞ்சிலார்; மற்றும் எதிர்க் கட்சித் தலைவர்கள் பாராட்டிப் பேசினர்.

மேலவையில் சிலம்புச் செல்வர் ம. பொ. சிக்கு பாராட்டு தெரிவித்து நிதியமைச்சர் நாஞ்சிலார், அவை முன்னவர் அமைச்சர் ராஜா முகமது, சங்கரலிங்கம், வகாப், ஏ. ஆர். தாமோதரன், நல்லசிவம், மாணிக்கம், ஜி. சுவாமிநாதன், மந்தாகினி கிருஷ்ணமூர்த்தி ஆகியோர் பேசினர்.

சமீபத்தில் சென்னை பல்கலைக்கழகம்மேலவைத் தலைவர் சிலம்புச் செல்வர் ம.பொ.சிக்கு டாக்டர் பட்டம் அளித்து சிறப்பித்தது தெரிந்ததே.

அதற்காக ம. பொ. சியை மேலவையில் பாராட்டிப் பேசினர்.

### நாஞ்சிலார்

நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசும்போது கூறியதாவது:-

ஆன்ருேர் வாழ்த்தும் ஆசனத்தில் வீற்றிருக்கும் தமிழே உன் சீர்எமை திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துகிறேன்.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினா.

### ராஜாமுகமது

அவை முன்னவர் அமைச்சர் ராஜாமுகமது கூறியதாவது.

தமிழின் மூலம் கலை இலக்கிய பாடங்களைச் சொல்லி கொடுக்கச் செய்ய வேண்டும்என்றகொள்கைகளை உடைய துணைவேந்தர் இருக்கின்ற பல்கலைக்கழகம் டாக்டர் பட்டம் அளித்திருப்பது பெருமைக்குரியது.

புகழ் பெறுவதற்கு அடிப்படை ஆற்றல் சக்தி துணிச்சல் தேவை. நீங்கள் எழுதியுள்ள 102 தமிழ் நூல்களை உலகமும் தமிழகமும் நன்கு அறியும்.

தங்களை வாழ்த்துவதில் மகிழ்ச்சி அடைகின்றேன். அரசின் சார்பிலும் முதல்வர் புரட்சித்தலைவரின் சார்பிலும், மேலவையின் சார்பிலும் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொள்கிறேன். பல்கலைக் கழகத்திற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

### ம. பொ. சி.

பாராட்டுகளுக்கு நன்றி தெரிவித்து மேலவைத் தலைவர் ம.பொ.சி பேசும் போது கூறியதாவது:

எல்லோரும் பாராட்டுவது எனக்கு 10 வயது குறைந்தது போன்ற உணர்வு ஏற்படுத்துகிறது. என்னை பாராட்டுவது, பெருமைபடுத்துவது எல்லாம், அந்த பல்கலைக் கழகத்திற்குத் தருகிற பாராட்டாகும்.

எனக்குக் கிடைத்திருக்கிற இந்த சிறப்பு 'எங்கும் தமிழ், எதிலும் தமிழ்' என்ற கொள்கைக்கு கிடைத்த சிறப்பாகும்.

நான் ஒரு கருவி.கர்த்தா தமிழ்.

பல்கலைக்கழக ஆட்சி மன்ற குழுவில் 5 வருடம் இருந்திருக்கிறேன். அப்போது தமிழ் வளர வழி செய்தோம்.

பட்டமளிப்பது தமிழில் இல்லை.

இன்றைக்கு 'டாக்டர்' என்பதை 'இலக்கிய முனைவர்' என்று தமிழாக்கி கொடுத்திருக்கிருர்கள்.

உங்கள் அனைவரின் ஒத்துழைப்புடனும் மேலும் தமிழுக்குப் பாடுபடுவேன்.

இவ்வாறு மேலவைத் தலைவர் ம. பொ. சி. கூறினர்.

## டாக்டர் நாவலர் நிகழ்ச்சிகள்

29 10 79காலை குடந்தை அணைகரை, மாலை தாராசுரம், 30-10-79 காலை திருச்சி அண்ணா தமிழ் இலக்கியக்கழகம். மாலை ராஜராஜசோழன்திருநாள்

31-10-79 காலைகோவை திருமண நிகழ்ச்சி- மாலை சின்னதடாகம், இரவு கோவை 100 அடி ரோடு,

1-11-79 மாலை பூந்துறை, இரவு ஈரோடு,

2-11-79 காலை சென்னை.

## நார்த்தங்குடி தி. மு. க. வினர் கழகத்தில் இணைந்தனர்

சிதம்பரம், அக். 28- சிதம்பரம் தொகுதியைச் சேர்ந்த நார்த்தங்குடி தி. மு, க. செயலாளர் ஜி. கலைச் செல்வன் தலைமையில் 10 பேர் கழகத்தில் இணைந்தனர், இவர்கள் ரத்தின வேணுகோபால் முன்னிலையில் கழகத்தில் சேர்ந்தனர்.

## ஆசிரியர் கழகத்துக்கு முழு நேர செயலாளர் நியமனம்

### அரங்கநாயகம் அறிவிப்பு

சென்னை, அக். 28- தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு மாவட்ட பெற்ருேர் ஆசிரியர் கழகத்திற்கும் பள்ளி ஆய்வாளர் அந்தஸ்தில் முழு நேர செயலாளர்கள் நியமிக்கப்படுவார்கள் என்று கல்வித் துறை அமைச்சர் அரங்கநாயகம் அறிவித்திருக்கிருர்.

தமிழ் நாடு பெற்ருேர் ஆசிரியர் கழக மாநில பொதுக்குழு செயற்குழுக் கூட்டம் தலைமைச் செயலகத்தில் நடைபெற்றது.

கூட்டத்திற்கு பெற்ருேர் ஆசிரியர் கழகத்தின் தலைவரும்-கல்வி அமைச்சருமான செ. அரங்கநாயகம் தலைமை வகித்தார்.

கூட்டத்தில் பெற்ருேர் ஆசிரியர் கழக துணைத் தலைவர் ஈ.சி.பி. பிரபாகர் பள்ளிக்கல்வி இயக்குநர் டாக்டர் வெங்கடசுப்பிரமணியம் மற்றும் உறுப்பினர்கள் உட்பட 33 பேர் கலந்து கொண்டனர்.

கூட்டத்திற்கு தலைமை வகித்து கல்வி அமைச்சர் அரங்கநாயகம் பேசுகை கூறியதாவது:

பெற்ருேர் ஆசிரியர் கழகம் இப்பொழுது வளர்ச்சி அடைந்திருக்கிறது. இந்த அமைப்பு கடந்த இரண்டு ஆண்டுகளாக மிகச்சிறந்த முறையில் காரியங்களை நிறைவேற்றி வருகிறது.

இரண்டாண்டுகளுக்கு முன்பு இந்த அமைப்பு செய்து வந்தது என்ன? விளையாட்டுப்போட்டிகளை நடத்துவது, ஆண்டு விழாவை நடத்துவது, பள்ளியில் மாணவர்களை சேர்க்கும் போது நன்கொடை வசூலிப்பது போன்ற பணிகளையும் தலைமை ஆசிரியர் சொல்கிறபடியெல்லாம் செய்கிற குழுவாகவும் இருந்தது.

நாம் அமைத்திருப்பது வெறும் பெற்ருேர் சங்கமல்ல. நாம் வைத்திருப்பது பெற்ருேர் ஆசிரியர் கழகம். இதில் நாம் குறைபாடுகளைக் களைய வேண்டும். நம் பள்ளிகளில் பிள்ளைகள் எப்படி படிக்கிருர்கள் என்பதை நாம் கண்காணித்தாக வேண்டும்.

### முன்னேற்றம்

நம்முடைய பிள்ளைகள் மனப்பாடம் செய்து படிப்பதையே பழக்கமாகக் கொண்டிருக்கிருர்கள். இதஞல் முன்னேற முடியாத நிலை இருக்கிறது. விபத்து போல ஒருவர் இருவர் முன்னேறி இருக்கிருர்கள்.

நம்முடைய சாலைகளை பார்த்தால் படித்தவர்கள் போட்ட சாலையாக தெரியவில்லை. புத்தகத்தில் படிக்கின்ற அறிவு வாழ்க்கையில் பயன்படுகின்றதாக இருப்பதில்லை.

இந்த பெற்ருேர் ஆசிரியர் கழகம் பள்ளிகளுக்கு தேவையான குடிநீர் கழிவிட வசதி செய்து தர வேண்டும். பெற்ருேர் ஆசிரியர் கழகம் வெறும் பொம்மை அமைப்பாக இருக்கக் கூடாது. இந்த அமைப்பு சீரான முறையில் நடைபெறுவதற்கு நீங்கள் ஒவ்வொருவரும் பாடுபடவேண்டும்.

நாம் சமுதாயப் பணிகளை ஆற்றி வருகிருேம். பெற்ருேர் ஆசிரியர்கழகம் தேவை என்பது மட்டுமல்ல, இன்றியமையாததும் ஆகும். பள்ளிகள் சரியாக நடக்கிறதா இல்லையா என்பதைஇந்தக் கழகம் கண்காணிக்க வேண்டும்.

அரசு பள்ளிகளைவிட தனியார் பள்ளிகளுக்கு மவுசு இருப்பதாக கருதப்படுகிறது. அதைவிடக் கட்டணம் வாங்கும் பள்ளிகளுக்கு இன்னும் மவுசு இருப்பதாக கருத்து நிலவுகிறது.

அரசுப் பணிகளையும் பஞ்சாயத்து யூனியன் பள்ளிகளையும் அத்தகைய மவுசு உள்ள பள்ளிகளாக மாற்றுவதற்கு பெற்ருேர் ஆசிரியர் கழகம் பாடுபடவேண்டும்.

தனியார் பள்ளிகளில் பாடம் நடத்துகிற ஆசிரியர்கள் பெற்றிருக்கின்ற அதே தகுதியைத் தான் அரசுப்பள்ளிகளில் பாடம் நடத்துகிற ஆசிரியர்களும் பெற்றிருக்கிருர்கள். இருந்தாலும் தனியார் பள்ளிகளில் பாடம் நடத்துவதைப் போல அரசு பள்ளிகளிலும் பாடம் நடத்தும்படி பெற்ருேர் ஆசிரியர் கழகம் பார்த்துக்கொள்ள வேண்டும்.

அரசு பள்ளிகளில் உண்மையான மேனேஜ்மெண்ட் பெற்ருேர் ஆசிரியர் கழகம்தான். பள்ளிகளை சீராகவும் சிறப்பாகவும் நடத்துகிற பணியில் பெற்ருேர் ஆசிரியர்கழகம் முழுமூச்சுடன் பாடுபட வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் பேசினர்.

மாவட்டங்களில் உள்ள ஒவ்வொரு மாவட்ட ஆசிரியர் கழகத்திற்கு பள்ளி ஆய்வாளர் அந்தஸ்தில் முழுநேர அலுவலரை செயலாளராக நியமிப்பது என்றும், இவரது அலுவலகம் மாவட்ட முதன்மைக்கல்வி அலுவலர் அலுவலகத்தில் இயங்குவது என்றும் பொதுக் குழுவில் முடிவு செய்யப்பட்டது.

மாநில பெற்ருேர் ஆசிரியர் கழகத்தின் தலைவரும் கல்வி அமைச்சருமான அரங்கநாயகம் சுற்றுப் பயணம் செய்யும்போது அவசியமாக தேவைப்படும் பள்ளிக்கு 500 ருபாய்க்கு மேற்படாமல் பெற்ருேர் ஆசிரியர் கழக நிதியில் இருந்து உதவி வழங்கஅதிகாரம் வழங்கும்தீர்மானம் ஒன்றும் இக்கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது.

## அமைச்சர் எட்மண்ட் தகவல்: பிற்பட்டோர் நலன் பற்றி ஆய்வு செய்ய அரசு குழு அமைப்பு

சென்னை, அக் 28- தமிழ் நாட்டிலுள்ள பிற்பட்ட சமூகத்தைச் சேர்ந்த ஒவ்வொரு வகுப்பினர் பற்றியும் ஆய்வு செய்வதற்காக குழு ஒன்று நியமிக்கப்பட்டுள்ளது. மிகவும் பின்தங்கிய வகுப்பினருக்கு அரசுப் பணிகளிலும் கல்வி நிலையங்களிலும் தனியான ஒதுக்கீடு செய்ய அரசு பரிசீலித்து வருகிறது என்று அமைச்சர் ஜி ஆர். எட்மண்ட் சட்டமன்றத்தில் தெரிவித்தார்.

கழகஉறுப்பினர் பவானிசாகர் சின்னசாமி எழுப்பிய வினுவுக்கு உணவு மற்றும்பிற்படுத்தப்பட்டோர் நலத்துறை அமைச்சர் ஜி. ஆர். எட்மண்ட் பதிலளிக்கையில் கூறியதாவது:

பிற்பட்ட வகுப்பினரிடையேஉள்ள மிகவும் பின்தங்கிய வகுப்பினருக்காக அரசுப்பணிகளிலும் கல்வி நிலையங்களிலும் தனியான ஒதுக்கீடு செய்வது பற்றிய செயற்குழு அரசின் பரிசீலனையில் உள்ளது.

தமிழ்நாட்டில் உள்ள பல்வேறு வகுப்பினர்களில் 146 வகுப்பினர் பிற்பட்டோர் வகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

இவற்றில் 39 வகுப்பினர் மிகவும் பின்தங்கியவர் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

அரசுப்பணிகளில் இடம் ஒதுக்கீடு செய்வதிலும் கல்லூரிகளில் இடம் ஒதுக்கீடு செய்வதிலும் இவர்களுக்கு தனியான ஒதுக்கீடு இதுவரையில் இல்லை.

ஆஞல் தற்பொழுது ஒதுக்கீடு செய்ய அரசு ஆலோசித்து வருகிறது. பொருளாதார ரீதியில் மிகவும் பின் தங்கியவர்கள் இருப்பதால் மிகவும் பிற்படுத்தப் பட்டவர்களுக்கு தனி ஒதுக்கீடு செய்வது பற்றி அரசு பரிசீலித்து வருகிறது.

சலவைத் தொழிலாளர்கள் மற்றும் சில சமூகத்தினர் தங்களை தாழ்த்தப்பட்ட சமுதாயத்தில் சேர்க்கக் கோரியுள்ளனர்.

தாழ்த்தப்பட்டோர்கள் பட்டியலில் சேர்க்கும் அதிகாரம் மாநில அரசுக்கு இல்லை. மத்திய அரசிடம் தான் இருக்கிறது.

1969-ம் ஆண்டு அமைக்கப்பட்ட ஏ. எல். சட்டநாதன் குழு பிற்பட்டோர் நலன்களைப் பற்றி ஆராய்ந்து அறிக்கை கொடுத்தது.

அதில் 110 சிபாரிசுகள் கொடுக்கப் பட்டிருக்கின்றன. அவற்றில் பல அமல்படுத்தப்பட்டிருக்கிறது. ஒரு சில சிபாரிசுகள் நிதிநிலை காரணமாகவும் சட்டசிக்கல்கள் காரணமாகவும் அமல்படுத்தப் பட முடியாமல் இருக்கின்றன.

5 ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒரு குழு அமைத்து பிற்பட்டோர் நலன்களை பரிசீலனை செய்யும்படி சட்டநாதன் குழு பரிந்துரைசெய்திருக்கிறது

அதன்படிபுதிதாகஇரண்டாவது குழு அமைப்பதற்குமுன் ஒவ்வொரு சமுதாயத்தைப் பற்றியும் தகவல்களை அறிவதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் எட்மண்ட் கூறினர்.

## வாக்காளர் நகல் பட்டியல்

சென்னை, அக். 28- சட்டமன்றத் தொகுதி வாக்காளர் நகல் பட்டியல் மாவட்டங்களில் அந்தந்த வருவாய் கோட்ட அலுவலர் அலுவலகத்திலும் சென்னை நகரில் மாநகராட்சி கோட்ட அலுவலர் அலுவலகத்திலும் பொதுமக்கள் பார்வைக்காக வைக்கப்பட்டிருக்கிறது.

பொதுமக்கள் இந்த வாக்காளர் பட்டியலைப் பார்வையிடலாம். 21வயதையடைந்தோரின்பெயர்கள் இந்த பட்டியலில் இல்லையென்ருல் அடுத்த மாதம் 3-ந் தேதிக்குள் விண்ணப்ப படிவத்தை பூர்த்தி செய்துஅவர்களது பெயரை சேர்த்துக் கொள்ளலாம்.

## கே. ஏ. கே. பங்கேற்கும் அண்ணா சிலை திறப்பு விழா

சென்னை, அக். 28- இன்று(28-ந்தேதி)மாலை 7 மணிக்கு சென்னை 121 வது வட்டம், அறிவுத் தென்றல் எம். ஜி. ஆர். மன்றம் சார்பாக கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, தர்மாபுரத்தில் பேரறிஞர் அண்ணா சிலை திறப்பு விழா நடக்கிறது.

நெடுஞ்செழியன் தலைமை வகிக்கிருர். அமைச்சர் கே. ஏ. கே. அண்ணா சிலையைத் திறந்து வைக்கிருர். பா. வளர்மதி, தேவாய்பூர் திருவேங்கடம், சி. வி. அன்புத்தம்பி, புரட்சிமணி சா. கோவிந்தசாமி, அங்கமுத்து, கு. க. செல்வம், தி. நகர் மூர்த்தி, பா. லட்சுமணன், கே. எஸ். மணி, டி. உமாபதி, ஏ. ஆர். மூர்த்தி, சி. ஞர்துசாமி கே. நாகப்பன் மற்றும் பலர் பேசுவர்.

## உயர்நிலைப் பள்ளிகளில் பகுதிநேர நூலகர் நியமனம்

சென்னை, அக். 28-தமிழ் நாடுஅரசுஉயர்நிலைப்பள்ளிகளில் உள்ள நூலகங்களில் வேலைசெய்ய பகுதி நேர நூலக அலுவலர்களைநியமிக்க அரசு உத்திரவிட்டுள்ளது.

இவ்வாறு மொத்தம் 1022 உயர்நிலைப் பள்ளிகளில் நூலக அலுவலர்கள் நியமிக்கப்படுவார்கள். இவர்களுக்கு மாதம் ரூ.50 சம்பளம் கொடுக்கப்படும். ஓய்வு பெற்ற ஆசிரியர்களும் இந்த வேலைக்கு சேர்த்துக் கொள்ளப்படுவார்கள். ஆஞல் பள்ளியில் ஆசிரியராக பணியாற்றிக்கொண்டு அவர் அலுவலராக பணியாற்றி வந்தால் அவருக்கு ரூ. 25 சம்பளம் கொடுக்கப்படும்.

## சென்னை மருத்துவக் கல்லூரி பேராசிரியர் ஜப்பான்பயணம்

சென்னை, அக். 28 சென்னை மருத்துவக் கல்லூரியில் மகப்பேறுமகளிர் நோயியல்துறையில் சார்பு பேராசிரியராகவும் எழும்பூர் தாய் சேய் நல மருத்துவமனையில் மகப்பேறு மகளிர் நோயியல் மருத்துவராகவும் பணிபுரியும் டாக்டர்லோகசுந்தரி செல்வராஜ் ஜப்பான் நாட்டின் தலைநகரான டோக்கியோவில் நடக்கும் மகப்பேறுமகளிர் நோயியல் 9-வது உலக மாநாட்டில் பங்கேற்க ஜப்பான் சென்றுள்ளார். மாநாட்டில் தனது ஆராய்ச்சிக் கட்டுரையை சமர்ப்பிப்பார்.

## கழகத் தோழர் வெட்டிக் கொலை

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

குதனன், இரா. து. சந்தானம் மற்றும்தோழர்களும், சென்று தமிழ்வாணனுக்கு இறுதி அஞ்சலி செலுத்தினர்.

தி. மு. க. போர்வழிகளின் கொலைவெறி இப்பகுதி மக்களிடையே பெரும் அச்சத்தையும், பீதியையும் உண்டு பண்ணியுள்ளது.

கொலையுண்ட தமிழ்வாணனுக்கு திருமணமாகி 6 மாதமே ஆகிறது. அவரது மனைவி பெயர் தனலட்சுமி.

கொலைசெய்த திமுக காலி தங்கையன் போலீசாரால் கைது செய்யப்பட்டார்.

### ஆவடியில் தி. மு. க. ரகளை

ஆவடியில் இன்று மாலை கழக பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர், முசிறிப்புத்தன், திருப்பூர் மணிமாறன் ஆகியோர் பேசுகிருர்கள்.

இதற்கான சுவரொட்டிகளை கழகத்தோழர்கள் நேற்று இரவு ஒட்டிக் கொண்டிருந்தனர்.

அந்த சுவரொட்டிகள் மீது திமுக போர்வழிகள் தங்கள் கட்சி சுவரொட்டிகளை வேண்டுமென்றே ஒட்டி கழக சுவரொட்டிகளை மறைக்கும் காரியத்தில் ஈடுபட்டனர்.

இதைக் கழகத்தோழர்கள் ஆட்சேபித்தனர். உடனே திமுக நபர்கள் கழகத்தோழர்களை அடித்து உதைத்தார்கள். இதில் ஆவடி சிவாவுக்கு பலத்த காயம் ஏற்பட்டது.

தகவல் அறிந்த புலவர் சோமுசா, முகவை சுந்தரம், மணி, மனோகரன், டி. வி. கோபால், கோபிநாத் ஆகியோர் வந்து காப்பாற்றினர்கள்.

இது சம்பந்தமாக அரிதாஸ் உள்ளிட்ட தி.மு.க. காலிகள் மீது போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது.

### மன்றசெயலர் மீது தாக்கு

சென்னை 141 வது வட்டம் அபபாவுநகர் எம்.ஜி.ஆர் மன்றச் செயலாளர் சுப்பிரமணியம்.

தி மு க போர்வழிகளின் சாராயத்தை இவர்தடுத்தார். அவ்வளவுதான். வந்துவிட்டது ஆத்திரம் திமுக சமூக விரோதிகளுக்கு.

சுப்பிரமணியத்தை கத்தியால் அவர்கள் குத்தினர். கழகத்தோழருக்கு 4 இடங்களில் கத்திக் குத்து விழுந்தது. அவர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டார்.

வட்ட அமைப்பாளரும் குடிசைமாற்று வாரிய உறுப்பினருமான சைதை என். கண்ணன் சைதை செல்லம் ஆகியோர் கத்திக்குத்துபட்ட தோழர் சுப்பிரமணியத்தைப்பார்த்து உடல்நலம் விசாரித்தனர்.

இந்த கத்திக்குத்து சம்பவம் பற்றி போலீசார் புலன் விசாரணை நடத்தி வருகிருர்கள்.

### பூங்காநகர்

சென்னை பூங்கா நகர் 61-வது வட்டம், சூளை குறவன் குளம் பகுதி கழகச்செயல்வீரர் நரசிம்மன். இவரது இயக்கப் பணிகளை பொறுக்க மாட்டாத திமுக காலிகள் ஆறுபேர் நரசிம்மனைக் கத்தியால் தாக்கியிருக்கின்றனர்.

நரசிம்மன் கழுத்தில் கத்திக்குத்து விழுந்தது. அவர் படுகாயமடைந்தார். அவரைக் கழகத் தோழர்கள் மருத்துவமனையில் சேர்த்தார்கள். அங்கு அவருக்கு சிகிச்சை அளிக்கப் படுகிறது.

இது குறித்து போலீசில் புகார் தெரிவிக்கப்பட்டுள்ளது. திமுக காலிகள் மீது வழக்குப் பதிவு செய்து போலீசார் விசாரணை செய்து வருகின்றனா.

28-10 79

(இன்று மாலை)

நுங்கம்பாக்கம் வடக்கு மாடவீதியில் F3 காவல் நிலையம் எதிரில் ஆர்ட்டைரடக்ர்

ப அங்கமுத்து தலைமையில்

மாண்புமிகு போக்குவரத்துத் துறை அமைச்சர்

சி. பொன்னையன் B. Com B L.

சட்டமன்ற உறுப்பினர்கள்

டாக்டர் சமரசம்

பாக்கூர் சுப்பிரமணியம்

கிணத்துக்கடவு கந்தசாமி

மற்றும் சி. வி. ஆடலழகன் பம்பாய் S. L. ஜான் சைதை தமிழ்ச்செல்வன், K. இராஜேந்திரன், K. . தூயமணி S. P. சிவபெருமாள் நெல்லை S. பழனி A. B. வரதராஜன் மற்றும் ஆயிரம்விளக்கு பகுதி வட்ட அமைப்பாளர்கள் 107 வது வட்ட சார்புமன்ற நிர்வாகிகள் பேசுகின்றனர்.

அனைவரும் திரண்டு வாரீர்

S. புரட்சிமணி (107 வது வட்ட அமைப்பாளர்)

ராமநாதபுரம் மாவட்டம் எமனேஸ்வரம் பகுதியில் முதல்வர் புரட்சித் தலைவர் நெசவாளர் தொழிற் கூட்டுறவு சங்கத்தைத்திறந்துவைத்துப் பார்வையிட்டார். அமைச்சர் சுப்புலட்சுமி உடனிருக்கிறார்.

# தஞ்சை மாவட்டத்தில் 5,400 ஏக்கரில் ரசாயன உப்பு ஆலை

## எஸ். எம். துரைராஜ் தகவல்

சென்னை. அக். 28- தஞ்சை மாவட்டத்தில் 5 ஆயிரத்து 400 ஏக்கர் நிலப்பரப்பில் 'மரைன் கெமிக்கல்ஸ்' தொழிற்சாலை நிறுவப்படும் என்று முதல்வரின் பேரவைச் செயலர் எஸ்.எம்.துரைராஜ் சட்டசபையில் அறிவித்தார்.

இதுபற்றி அவர் மேலும் கூறியதாவது:-

தமிழ்நாடு தொழில் வளர்ச்சிக் கழகம் தயாரித்துள்ள அறிக்கையின்படி தஞ்சாவூரில் வேதாரண்யம் பகுதியில் உள்ள சுமார் 60 ஆயிரம் ஏக்கர் சதுப்பு நிலத்தில் பெரிய அளவில் உப்பு உற்பத்தி மேற்கொண்டால் அதன் அடிப்படையில் 10 கோடி ரூபாய் பெறுமான உப்பு மற்றும் கடல் சார்புள்ள ரசாயனத் தொழிற்சாலைகளை நிறுவ சாத்தியக்கூறு உண்டு.

ஆனால் பெரிய அளவில் இந்த இடத்தில் உப்பளங்கள் நிறுவினால் அது அந்த இடத்தின் இயற்கை சமநிலை பாதிக்கப்படலாம். ஆனால் அரசு தற்போது சதுப்பு நிலத்தின் மேற்குப் பகுதியில் இருக்கும் வடக்காடு, மரவக்காடு கிராமங்களில் உள்ள 5,500 ஏக்கர் நிலப்பரப்பிலேயே முதற்கட்ட உப்புத் தொழிற்சாலை அமைக்க அரசு உத்தரவிட்டுள்ளது.

இவ்வாலை நிறுவப்பட்ட பின்பே இதன் அடிப்படையில் என்னென்ன கடல் சார்புள்ள ரசாயன உற்பத்தி செய்ய முடியும் என்பதை நிர்ணயம்செய்ய இயலும். இவ்வாறு எஸ்.எம். துரைராஜ் தெரிவித்தார்.

கமுதி அரசினர் மருத்துவமனைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் அடிக்கல் நாட்டினார். அமைச்சர்கள் காளிமுத்து, சவுந்தரராசன் உடனிருக்கின்றனர்.

# கோயில் பணத்தை சொந்தத்துக்குப் பயன்படுத்திக்கொண்ட நபர்

# கண்ணப்பனை மந்திரி ஆக்கியதே பரிதாபம்!

## விசாரணைக் கமிஷன் அறிக்கை முழு விவரம்

சென்னை, அக். 28-இந்து சமய அற நிலைய மடங்களுக்குப் பொறுப்புள்ள அமைச்சராக இருந்த வகையில் தி.மு.க. அமைச்சர் கண்ணப்பன் அவரது அமைச்சர் பதவியைத் தவறான வகையில் அனுகூலமாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளார். இத்தகைய ஒருவரைக் கோயில்களையும், மடங்களையும் நிர்வகிப்பதற்குத் தேர்ந்தெடுத்தது பரிதாபத்திற்குரியதாகும் என்று நீதிபதி கிருஷ்ணசாமி நாயுடு தனது தீர்ப்பில் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

நெருக்கடி நிலைக்குமுன்பு 1972 ஜனவரிமாதம்முதல் தேதியிலிருந்து 1975 மே மாதம் 31ஆம் நாள் வரையில் மூன்றரை ஆண்டு காலத்தில் (தி. மு. க. ஆட்சி காலத்தில்) நடந்த அத்துமீறல்கள் குறித்து விசாரிக்க அமைக்கப்பட்ட தனி நபர் கமிஷன் (ஓய்வு பெற்ற சென்னை உயர்நீதி மன்ற நீதிபதி புள்ளூ. எஸ்.கிருஷ்ணசாமி நாயுடு விசாரணைக் கமிஷனின்) இடைக்கால அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:

இவ்வழக்கில் சதி, திட்டமிடப்பட்டு உருவாக்கப்பட்டுள்ளது. அதற்கான உள்நோக்கம் தெளிவாக உள்ளது. நேர்முக உதவியாளர் மூலமாக அச்சுறுத்தப்பட்டு முன்னாள் அறநிலைய அமைச்சர் கண்ணப்பனால் கட்டளை கொடுக்கப்பட்டுள்ளது. கொடுக்கப்பட்டுள்ள சாட்சியம் மிக நெருக்கடியான நேரத்தில் அதாவது. கோவை நாடாளுமன்றத் தொகுதி கோவை மேற்கு சட்டப் பேரவைத் தொகுதித் தேர்தல்கள் முடியும் போது தயாரிக்கப்பட்டுள்ளது.

### கடுமையான குற்றம்

ராமசாமியை ஒதுக்கித் தள்ளுவதற்கு இந்து சமய அறநிலையத்துறை துணை ஆணையாளர் சூரியராஜ் உதவி ஆணையாளர் சுவாமிநாதனும் மிகக் கடுமையான குற்றத்தைச் செய்துள்ளனர்.

இந்தக்குற்றத்தைச்செய்கையில் பொய்யான வழக்கொன்றை ஜோடித்து அதன் மூலம் கோயில் ஊழியர்களும் தொல்லைபடுத்தப் பட்டுள்ளனர் ஆகவே சதி ஒன்று தீட்டப்பட்டுள்ளது என்ற உண்மை நன்கு மெய்ப்பிக்கப்பட்டுள்ளது.

அறக் கட்டளைத் துறைக்கு அப்போது அமைச்சராகவும், கோவை நாடாளுமன்றத் தொகுதி கோவை மேற்கு சட்டப்பேரவைத் தொகுதி தேர்தல்களுக்கு பொறுப்பாய் இருந்தவருமான கண்ணப்பன் கட்டளைக்கு இணங்கத் தவறியதன் காரணமாகவும்தான் தற்காலிகமாக வேலையிலிருந்து தள்ளி வைக்கப்பட்டு பின்னர் நீக்கப்பட்டார் என்கிற நிலையைச ந்தேகத்திற்கிடமின்றித் தெளிவாக உறுதி செய்துள்ளார்.

கோயில் நிதிகளுக்கு செயல் அலுவலராக இருந்த இவர் அவற்றைக் கோவில் நலனுக்கு எதிரான காரியங்களுக்காகப் பயன்படுத்த மறுத்ததுதான் இதற்கான காரணம்.

### பொய் வழக்கு

அமைச்சரின் அதிகாரம், காவலர் தணிக்கைத் துறை அதிகாரிகள் உதவியைப் பெறுவதற்குரிய செல்வாக்குஆகியவற்றைப் பயன்படுத்தி பொய்யான வழக்கொன்று ஜோடிக்கப் பட்டுள்ளது.

கோயில் நலனுக்காகவும் செயல் அலுவலரிடம் விசுவாசமாக இருந்த ஒரே காரணத்திற்காகப் பழிவாங்கப்பட்டுள்ளனர், தொல்லைகளுக்குட்படுத்தப்பட்டு, பணியிலிருந்து நீக்கப்பட்டும் உள்ளனர்.

முன்னாள் அமைச்சர் கண்ணப்பனைப் பொறுத்த மட்டில், அவர் அப்போதிருந்த தி. மு. க. அரசின் அறநிலையத்துறை அமைச்சராக இருந்து வந்திருக்கின்றார். தமிழ் நாட்டிலுள்ள கோயில்களையும், மடங்களையும் நிர்வகிப்பதற்கு இத்தகைய ஒருவரைத் தொந்தெடுத்தது பரிதாபத்துக்குரியதாகும். முதல் எதிர் மனுதாரரின் நேர்மை குறித்து அதிகமாகக் கூறுவதற்கில்லாமல் இந்து சமய அறநிலைய மடங்களுக்கு பொறுப்புள்ளஅமைச்சராகஇருந்த வகையில் அவரது அமைச்சர்பதவியைத் தவறான வகையில் அனுகூலமாகப் பயன்படுத்திக் கொண்டு சமய நிறுவனங்களின் நலனைக்காட்டிலும் தனது அரசியல் கட்சியின் வளர்ச்சிக்காகக் கோயில் நிதிகளைப் பயன்படுத்திக் கொண்டார்.

இவர் செயல்பட்ட விதம் இந்து சமய அறநிலையத்துறைக்குப பொறுப்புடைய அமைச்சர் என்கிற முறையில் இவர் எந்த முறையில் நடந்தார் என்பதைப் புலப்படுத்துகிறது.

அறநிலையத்துறைஅமைச்சராகஇருந்த கண்ணப்பன் தம்மிடம் நிலைபெற்றிருந்த அதிகாரங்களைப் பயன்படுத்தியதோடல்லாமல் நேர்மையான அதிகாரிகள், கோயில் ஊழியர்கள் மீது தவறான வழக்குகளைத் தொடுக்குமாறு ஆலோசனை கூறி, சமய- அற நிறுவனங்களின் நோக்கங்களுக்கு மாறான காரியங்களுக்கு கோயில் நிதிகளைப் பயன்படுத்தியதற்கும் காரணமாக இருந்தார். எனவே, அவர் அறநிலையத்துறை பொறுப்புடைய அமைச்சர் என்கிற முறையில் தன்னுடைய பதவியைத் தவறாகப் பயன்படுத்தியதோடு தனது அதிகாரத்தையும் தவறாகப் பயன்படுத்தியுள்ளார்.

இவ்வாறு நீதிபதி கிருஷ்ணசாமி நாயுடுவிசாரணைக்கமிஷனின் இடைக்கால அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கரூர் பதிவு மாமட்டத்தை அமைச்சர் கே. ஏ. கே. துவக்கிவைத்தார். தமிழ்நாடு பதிவுத்துறைத்தலைவர் ஆர்.ஏ. சீத்தாராமதாஸ் உடனிருக்கிறார்.

குடிசைமாற்று வாரியசங்கம்

## ராமபத்திரனுக்கு நன்றி

சென்னை, அக். 28- தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்றுவாரிய ஊழியர் சங்கத்தினர் அளித்த கோரிக்கைகளை நிறைவேற்றி ஏராளமான ஊழியர்களின் மனக்குறையைப் போக்கி வைத்த வாரியத் தலைவர் ராமபத்திரனுக்கு குடிசை மாற்று வாரிய ஊழியர்கள் சங்கம் நன்றியும் பாராட்டும் தெரிவித்துள்ளது.

## அரியலூரில் துணைநீதிமன்றம் அரசு பரிசீலனை

சென்னை, அக். 28- அரியலூரில் துணை நீதி நீதிமன்றம்ஒன்றும் ஜெயங்கொண்ட சோழபுரத்தில் மாவட்ட முன்சிப்கோர்ட்டும் அமைப்பது பற்றி கழக உறுப்பினர் ஜெயங்கொண்டம் கருணாமூர்த்தி கேட்ட கேள்விக்கு சட்ட அமைச்சர் கே. நாராயணசாமி பதிலளித்துக் கூறியதாவது:

நீதிமன்றங்களில்அதிகார வரம்புக்குகுழு பரிந்துரைத்துள்ளவாறு அரியலூரில் துணை நீதி மன்றம் ஒன்றும் ஜெயங்கொண்ட சோழபுரத்தில் மாவட்டமுனிசீப கோர்ட் ஒன்றும் அமைப்பதற்காக செயற்குறிப்புகள் முன்னுரிமை வரிசைப்படி உள்ளன

கூடுதல் நிதி ஒதுக்கீடு கிடைத்த உடன் நீதி மன்றங்கள் அமைக்க ஆணையிடப்படும்

அரியலூரில் துணை நீதி மன்றம் அமைப்பது முன்னுரிமை வரிசையில் 5 வது இடத்தைப்பெற்றிருந்தது. நான்கு நீதிமன்றங்கள் அமைக்கப்பட்டு விட்டன. நிதிவசதி கிடைத்தவுடன் அரியலூரில் துணை நீதி மன்றம் அமைக்கப்பட்டு விடும் என்ற மகிழ்ச்சியான செய்தியை தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அமைச்சர் நாராயணசாமி கூறினார்.

மேலவைக் கூட்டம்:

## மறைந்த தலைவர்கட்கு அமைச்சர்ராஜாமுகமது இரங்கல் உரை

சென்னை- அக். 28-தமிழக மேலவைக் கூட்டத் தொடரில் மறைந்த தலைவர்களுக்கு இரங்கல் தெரிவித்து மேலவை முன்னவர் அமைச்சர் ராஜாமுகமது தீர்மானத்தை முன்மொழிந்தார்.

தமிழ்நாடு மேலவைக் கூட்டம் நேற்று முன்தினம் மாலை தொடங்கியது.

லோக் நாயக் ஜெ. பி, இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரல் மவுண்ட் பாட்டன் பிரபு, சென்னை உயர் நீதிமன்றமுன்னாள் தலைமை நீதிபதி ராஜமன்னார் ஆகியோர் மறைவுக்கு மேலவைக்கூட்டத்தில் இரங்கல் தெரிவிக்கப்பட்டது.

இந்த இரங்கல் தெரிவிக்கும் தீர்மானத்தை கிராமத் தொழில் துறை அமைச்சர் ராஜாமுகமது கொண்டுவந்தார்.

முன்னாள் பேரவை, மேலவை உறுப்பினர்களான, அலெக்சாண்டர் ஞானமுத்து, சுப்பராயன், மூக்கையாத் தேவர்; ஞான சிகாமணி, கோவிந்தராஜுலு ஆகியோரது மறைவுக்கும் மேலவைக் கூட்டத்தில் இரங்கல்தெரிவிக்கப்பட்டது.

அமைச்சர் ராஜாமுகமது இரங்கல் தீர்மானம் தெரிவித்து பேசியபோது கூறியதாவது:

இந்திய நாட்டின் விடுதலைப் போராட்ட தளபதிகளில் ஒருவரும், காந்தியின் கொள்கைகளை பின்பற்றியவரும், நேர்மை, ஒழுக்கம், நாணயம், வாய்மை இவைகளை கடைபிடித்தவருமான லோக் நாயக் ஜெ. பி. அவர்கள் மரணம் அடைந்ததை இந்த சபை துயரத்தோடு தெரிவித்துக் கொள்வதோடு அவர் குடும்பத்திற்கும், நாட்டு மக்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலும்சுதந்திரத்திற்கு உறுதுணையாக இருந்தவருமான மவுண்ட்பாட்டன் மறைவுக்கு அவர் குடும்பத்திற்கும், இங்கிலாந்து நாட்டு மக்களுக்கும் இந்த சபை ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

சென்னை உயர்நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி ராஜமன்னார் மறைவுக்கு இந்தசபையின் சார்பாக அவர் குடும்பத்தினருக்கு இரங்கல் தெரிவிக்கப்படுகிறது.

இவ்வாறு அமைச்சர் ராஜாமுகமது இரங்கல் தீர்மானத்தில் கூறினார்.

எதிர்க்கட்சித் தலைவர்கள் சங்கரய்யா, சுந்தரேச தேவர், தருமராஜ், சந்தோஷம், தாமோதரன், வகாப், டிமாண்டி, மாணிக்கம், நல்லசிவம், முத்துசாமி ஆகியோர் இரங்கல் தீர்மானங்களை வழிமொழிந்து பேசினார்கள்.

இதைத் தொடர்ந்து மேலவைத் தலைவர் ம. பொ. சி. தமது இரங்கலை தெரிவித்து பேசினார். சபையினர் 2 நிமிடம் மௌனமாகஎழுந்து நின்று அஞ்சலி செலுத்தினர். மறைந்தவர்கள் நினைவுக்கு மரியாதை தெரிவிக்கும் வகையில் மேலவைக் கூட்டம்ஒத்திவைக்கப்பட்டதாக சபைத்தலைவர் ம. பொ. சி. தெரிவித்தார்.

## இதென்னப்பா தில்லுமுல்லு?

முதல்வரின் வேண்டுகோளை போலீசார் ஏற்கவில்லை. ஆனால் நயினார்தாசின் அழைப்பை ஏற்றுபோலீசார் வேலை நிறுத்தம் செய்கிறார்கள். இதிலிருந்து நயினார் தாசுக்குத்தான் செல்வாக்கு அதிகம் என்பது தெரியவில்லையா! இப்படி பேசினார் கருணாநிதி.

வேலை நிறுத்தம் வாபஸ் என்று நயினார் தாஸ் அறிவித்ததாக செய்தி வந்த பிறகு இன்று அதே கருணாநிதி என்ன சொல்கிறார் "நயினார்தாஸ் என்கிற தனிமனிதர் கூறுவதை எப்படி ஏற்கமுடியும்" என்று கேட்கிறார்!

வேலை நிறுத்தத்தை நடத்தினால் நயினார்தாஸ் சொல்வதைக் கேட்கவேண்டும்!

வேலை நிறுத்தம் வாபஸ் என்றால் நயினார்தாஸ் சொல்வதைக் கேட்கக்கூடாது!

முரண்பாடே உனது மறுபெயர் தான் மூனாகானாவா?

## பல்லவன் போக்குவரத்து கழக அண்ணா தொழிற்சங்க மாவட்டப் பிரிவு கூட்டம்

பல்லவன் போக்குவரத்துக் கழக அண்ணா தொழிற்சங்க மாவட்ட பிரிவின் செயற்குழுக் கூட்டம் 31-10-79 அன்று சங்கத் தலைவர் ஆர். கோவிந்தன் தலைமையில் காலை 9 மணி முதல் மாலை 5 மணி வரை அண்ணா சாலையிலுள்ள பொது நூலகக் கட்டிடத்தில் நடைபெறும். கூட்டத்தில் சங்க வளர்ச்சியைப்பற்றியும் மற்றும் சில முக்கிய பிரச்னைகள்பற்றியும் விவாதிக்கப்படும். எனவே அழைப்புக்கிடைத்த நிர்வாகிகள் மட்டும் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

பி. செல்வராஜ்
பொதுசெயலாளர்

## சந்தா விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1 | வருடச் சந்தா தொகை | ரூ. | 120 |
| 6 | மாதச் சந்தா தொகை | ரூ. | 60 |
| 3 | மாதச் சந்தா தொகை | ரூ. | 30 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி

"அண்ணா"

275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-600 014


# அண்ணா





## கழகச் செய்திகள்

### அம்பத்தூர்

28-10-79 ஞாயிறு மாலை 6 மணிக்கு காமராஜர் பூங்கா அருகே சி. வி. விஜயன் தலைமையில் பேசுவோர்: டாக்டர் நாவலர் ராஜி எம். எல். ஏ. இ. மதுசூதனன், ஆவடி சிவா, கோ. அ. ஜார்ஜ், ஆர். எஸ். மணி, கஸ்தூரி பாலன், கே. கே. ராவ், கோ. தாஸ், விஜயகம் மற்றும் பலர்.

### ஏழுகிணறு

28-10-79 அன்று மாலை 7 மணிக்கு ஏழுகிணறு பூங்கா அருகே ஜி. நாகையா தலைமையில் பேசுவோர்: அமைச்சர் எட்மண்ட் குடிசைமாற்று வாரியத் தலைவர் பி. ராமபத்திரன், இ. மதுசூதனன், எம். பி. ஜியாவுதீன், கதிர் சோமசுந்தரம் எம். ஏ. ரகீம் கண்ணப்பர் ராஜேந்திரன், ஏவி ராஜேந்திரன் சுந்தரேசன் சி. சோ. சுந்தரம் கே. மோகன் சுந்தரம் மற்றும் பலர்.

### புருகேஸ்பேட்டை

29-10-79 கடலூர், புருகேஸ்பேட்டையில் எம். ராமு தலைமையில் பேசுவோர்: முத்துராமன், புரட்சிமணி, கி. அப்துல் லத்தீப் எம். எல். ஏ. ஏ. ரகுபதி, தே. ஜெனுர்த்தனன், அன்பு தண்டபாணி மற்றும் பலர்.

### மேற்கு மாம்பலம்

29-10-79 திங்கள் மாலை 7 மணிக்கு தம்மையா ரெட்டித் தெருவில் வி. ஆர். சுப்பிரமணியம் தலைமையில் பேசுவோர்: அமைச்சர்கள் கே. ஏ. கே. அரங்கநாயகம், சவுந்தர பாண்டியன், அன்புராஜ், ஜெ. பாலன், ரு. க. செல்வம், சா. கோவிந்தசாமி, இ. நகர் மூர்த்தி, இரா. பட்டாபி, கே. செல்வராஜ், ஏ. கருப்பையா, எம். துலுக்காணம் மற்றும் பலர்.

### செங்குன்றம்

29-10-79 அன்று மாலை 6 மணிக்கு செங்குன்றம் சாலையில் பி. வி. வேலாயுதம் தலைமையில் பேசுவோர்: பேரவைச் செயலாளர் நாஞ்சில் வின்சென்ட், அருணாசலம் சட்டமன்ற உறுப்பினர் அமிர்தராஜ், இ. மதுசூதனன், ஜி. ஆர். அல்போன்ஸ், நாட்டாமைனன், சி. வி. ஆடலரசன், கொ. அ. ஜார்ஜ், எழிலரசு, அருள்தாஸ், கண்ணையிரம், இ. பி. பாஸ்கரன் மற்றும் பலர்.

### அயனவரம்

29-10-79 திங்கள் மாலை 7-மணிக்கு அயனவரம், ஜாயின்ட் ஆபீஸ் அருகே சி. ஆர். நாயுடு தலைமையில் பேசுவோர்: அமைச்சர் கே. ஏ. கே. கே. நிலவழகன் கவிஞர் அலங்குடி சோமுராஜன், கவிஞர் தேனாஜி இ. மதுசூதனன் தாங்கை கண்ணன், ஜெயகோபி, இ. சித்தராமன், எம். ஏ. கண்ணன் மற்றும் பலர்.

### திருவல்லிக்கேணி

30-10-79 அன்று திருவல்லிக்கேணி, ஜாபர் முதலி தெருவில் வி. செல்வம் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் சவுந்தரபாண்டியன் எம். எஸ். அப்துல் காதர், ஜெ. பாலன், மு. திருஞானம், பி. பக்கிரிசாமி, கே. கணேசன், ஏ. கே. ரவீந்திரன், வி. புண்ணியகோடி மற்றும் பலர்.

# ✻ உதிரிப்பூக்கள் ✻



## உள்ளதைச் சொல்லுகிறேன்

அறிவும், ஆற்றலும் எங்கெங்கோ, யார் யாரிடமோ குவிந்து கிடக்கின்றன. தகுந்த சூழ்நிலை அமைந்து திறமை வெளிப்படும்போதுதான் பெருமைக்குரியவர்கள் யார் என்பதை அடையாளம் கண்டுகொள்கிறோம்.

திறமையைத் தெரிந்து கொண்ட பிறகு கூட பாராட்டுகின்ற பண்பு நம்மில் சிலருக்கு இல்லாமல் போய் விடுகிறது. இவனைப் பாராட்டி விட்டால், நம்மைவிட மேலே போய் விடுவானோ என்று எவனையோ பாராட்டவும் தயாராகின்ற போக்கினை காணுகின்றோம்.

இதனால் படத்தைப் பற்றி விமரிசிப்பதற்கு முன்பு, பட உலகில் உள்ள சிலரது தரத்தைப் பற்றி விமரிசிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

'முள்ளும் மலரும்' படம் வெளிவந்தபோது, சில முணுமுணுப்புக்கள் காதில் விழுந்தன.

''முள்ளும் மலரும் படம்வெற்றியடைந்ததற்கு இந்த மகேந்திரன் காரணமல்ல. இன்னொருவர் இல்லாவிட்டால்படம் இந்த அளவிற்கு வந்திருக்காது.''

அடுத்தவர்கள் திறமையைப் புகழ வேண்டுமென்று நினைப்பவர்கள் தாராளமாகச் செய்யலாம். அதற்காக நம்மவரைத் தாழ்த்தித்தான், இன்னொருவரை உயர்த்த வேண்டுமென்கிற குறைமதி ஏன்? உழைத்து, படிப்படியாக நம்மவர்கள் ஓரிருவர் வேகமாக முன்னேறிச் செல்ல முயன்று கொண்டிருக்கும் போது, அவர்கள் கால்களைத் தட்டி விடும் கைங்கரியத்தைச் செய்ய நினைப்பது முறையா? அப்படிப்பட்டவர்கள் கன்னத்தில் 'பளார்...' என்று அறைவதைப் போல... தலையில் 'நறுக்'கென்று குட்டுவதைப் போல... உதிரிப்பூக்கள் படத்தை மணக்க மணக்க மகேந்திரன் அளித்துள்ளார்.

''யாரையும் நம்பி... நானில்லை! என்னுடைய சொந்தக்காலில்தான் நிற்கிறேன்'' என்று அவர் சொல்லாமல்- 'உதிரிப் பூக்களை' சொல்லவைத்திருக்கிறார்.

## நல்லதைப் போற்றுகிறேன்

★ நாவல்களிலிருந்தாவது, ஆங்கிலப் படங்களிலிருந்தாவது முக்கியமான சம்பவங்களை எடுத்துக் கோர்த்து கதையாக்கி- கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன்-எல்லாம் தானே என்று போட்டுக் கொள்ளும் சூழ்நிலையில்....

★ மகேந்திரன் மாறுபட்டவராகக் காட்சியளிக்கிறார். அவரே ஒரு நல்லகதாசிரியராக இருந்தாலும், தரமான நல்ல கதைகளைத் தேடிப்பிடித்துதொடர்ந்து படமாக்கி வருகிறார். பழம்பெரும் எழுத்தாளர் புதுமைப்பித்தனின் கதை தேர்ந்தெடுத்த தன் மூலம் இன்னொரு எழுத்தாளரின் படைப்பை மதித்துப் போற்றும் தன்மையைக் காணுகின்றோம்!

★ வளமான கருத்துள்ள உரையாடல்களை எழுதுவதில் வல்லவரான மகேந்திரன் வசனகர்த்தாவாக இருந்தும் மிகையாக ஆக்கிவிடாமல் முதல்தர டைரக்டரின் படைப்பாக உதிரிப்பூக்களை வழங்கியுள்ளார்.

★ தமிழ்ப் படங்களென்றால் இப்படித்தான் இருக்க வேண்டும், அப்படித்தான் காட்சிகளை உருவாக்க வேண்டும் என்ற அர்த்தமற்ற சூழ்நிலைகளைத் தகர்த்தெறிந்து விட்டு சுதந்திரமாக- தனித்த உருவாக மகேந்திரன் பீடு நடை போட்டு, தன்வழி தனி தன்மையுடன் செல்கிறார்.

★ இந்தத் துவக்கத்தில் 'முள்ளை மலராக்கிய'வர்க்கு தொடர்ந்து வெற்றிக் காணிக்கைகளைப் போட்டு தன் நன்றியுணர்வைக் காட்டிக் கொள்கிறார்.

★ திரைப்படங்களில்சிறிய வேடங்களில் தோன்றியவர்களுக்கும், நாடக மேடைகளில் புகழ் பெற்றிருந்தும் கலைஞர்களுக்கும் நல்ல வேடங்களைத் தந்துள்ளார்.

இதற்கெல்லாம் மகேந்திரன் காரணம் என்றாலும் அதற்கு ஆதரவு தந்த தயாரிப்பாளர் பாலகிருஷ்ணனையும் பாராட்ட வேண்டும்.

## எக்ஸ்ரே!

கிராமிய மணம்கமழ இதுவரை பல படங்கள் வெளிவந்துள்ளன. ஆனால் இந்தப் படமோ கிராமத்திற்கு நம்மையும் அழைத்துச்சென்று வாழ வைத்து விடுகிறது. 'ரியலிசம்' என்று ஓயாமல் சொல்லிக் கொண்டிருப்பவர்களுக்கு ஒருபடி முன்னால் சென்று 'ரியலிசம்' என்பதற்கு பொருள்என்ன என்பதை 'உதிரிப்பூக்கள்' காட்டிக்காட்டிவிட்டன.

படம் வேறு... பார்வையாளர்களான நாம் வேறு என்று இல்லாமல், கதையோடு ஒன்றச் செய்து, அழுகின்ற காட்சிகளில் அழவைத்து, சிரிக்கின்ற காட்சிகளில் சிரிக்கவைத்து கதா பாத்திரங்களோடு நம்மையும் உறவாடவைக்கிற திறமை மகேந்திர ஜாலமா!

ரயிலில் வரும் சுகாதார அதிகாரியை வரவேற்க காத்திருக்கும் இருவர் அவரை அழைத்துச் செல்கின்றனர்- நம்மையும் தான்!

அதிகாரியின் கேள்விகளுக்கு டிரைவரும் பணியாளும் 'எஸ் சார்... எஸ் சார்' என்று சொல்லும் போது அதிகாரியும் மனைவியும் மட்டுமல்ல நாமும் சிரிக்கிறோம்!

இன்னொரு காட்சி-

மரணப்படுக்கையில் இருக்கும் லெட்சுமியின் வாயில் அவளது மகன் (ஒரு உதிரிப்பூ) பாலை ஊற்றுகிறான். அதற்கு முன்பு பெண் குழந்தை (இன்னொரு உதிரிப்பூ) கன்னத்தில் முத்தமிடுகிறது. தாயின் வாயிலிருந்து பால் வழிகிறது- உயிர்பிரிகிறது. தங்கை குமுறிக்குமுறி அழுகிறாள். தந்தை ஆறாத் துயரத்தோடு நிற்கிறார்.

நம்மால் துக்கம் தாங்க முடியவில்லை. கண்கள் கண்ணீரைச் சொரிகின்றன.

''பிள்ளைக்கு எப்போ முடி வெட்டுறீங்க...'' என்று நாவிதன் கேட்டபடி இருக்கிறான்.

மாண்டுவிட்ட தாயின் தலைப்பிள்ளைக்கு மொட்டை அடிக்க அவனுக்கு வாய்ப்பு ஏற்படுகிறது.

''நேரம்வரும்..நேரம்.. வரும்னு சொன்னீங்களே...அந்த நேரம் இது தானும்மா...,'' என்று அழுதபடி தன் தொழிலைச் செய்ய மறுத்து அழுகிறான்.

நாமும் மனதுக்குள் புலம்புகின்றோம்.

ஆற்றங்கரையில் செண்பகம் பாட்டுக் கச்சேரி செய்வதும் அவளதுதோழிகள் வெறுங்கைகளிலேயே மிருதங்கமும், வயலினும் வாசிப்பதும்- ஆடுகள் கேட்பதும் எருமை மாட்டை 'டுர்' என்று துரத்தி விடுவதும்- சங்கீத வித்வான்களின் சேஷ்டைகளையெல்லாம் செய்ய வைத்து, படம் பார்க்கின்றவர்கள்தம்மை மறந்து லயிக்க வைத்திருப்பதும்நல்லநயம்! இது போல் சுவையாக ஒரு பாடல் காட்சி இது வரையில் படமாக்கப்பட்டதில்லை.

பாடல் காட்சி என்றால் எழுந்து செல்வது என்பது வழக்கமாகி விட்டது. அதிலும் கர்நாடக சங்கீதம் என்றால் கேட்கவே வேண்டாம்.

கரித்துக் கொட்டுகின்ற கணவன், மனைவிக்கு மல்லிகைப் பூவாங்கிக் கொடுத்து சினிமாவுக்குப் போகத் தயாராகஇருக்கும்படி மகனிடம் சொல்லி அனுப்புகிறான்.

மனைவி லட்சுமி ஆச்சரியத்தோடு பிள்ளையைப் பார்த்துவிட்டு வானத்தைப் பார்க்கிறாள்..

அங்கே கருமேகங்கள் திரண்டு நிற்கின்றன.

மனைவியின்மீது பழி கூறி பஞ்சாயத்தில் நிறுத்திய கணவனிடம், 'அவள் உத்தமி' என்று அதிகாரி கூறுகிறான். அலட்சியமாகத் திரும்பும் மேனேஜரின் தோளைத் தொட்டுநிறுத்துகிறான். அடுத்த காட்சி அதிகாரி உதட்டில் வழியும் ரத்தத்தை ஆற்று நீரில் கழுவிக்கொண்டிருக்கிறான். இதற்கிடையில் சிறுவன் ஒருவன் மணலில் புரண்டு கொண்டிருப்பது போல் காட்டப்பட்டிருக்கிறது. சண்டைக் காட்சி இல்லை. ஆனால் அதைவிட விறுவிறுப்பாக- நயமாக உள்ளது.

தாய் தனது மகன் (சுந்தரவடிவேலுவை) மானேஜரைக் கடிந்துகொள்ளும் போது, அவனுக்கு பதில் அவனது மகனைக்காட்டியிருப்பது....

செண்பகம் தனது அக்காவின் கணவனைப்பார்க்க வீட்டிற்குள் செல்கிறாள். வெளியில் அவளது எதிர்காலக் கணவன் ஒரு செடியைக்கிள்ளி, அதி

### :நாகை தருமன்:

லிருந்து ஒவ்வொரு இலையாகப் பிய்த்துப் போடுகிறான். கடைசியில் பூ மட்டும் மிஞ்சுகிறது. உள்ளே- செண்பகத்தை அவளுடைய அக்காவின்கணவன் துகிலுரிந்து நிர்வாணமாக்குகிறான் என்பதை நாசூக்காகக் காட்டி இருக்கும் நேர்த்தி.,.

இப்படி படத்தின் ஒவ்வொரு காட்சியையும் உருவாக்கியிருக்கும் சிறப்பை எப்படி புகழ்வது!

## உரையாடல்

உரையாடல்களின் ரத்தினச்சுருக்கம்:

''நான் அவுங்களுக்கு தகப்பனாகவே இருக்கிறேன் புரோக்கராக இருக்க விரும்பவில்லை.''

''உங்களைத்திருப்பிஅடிக்காததற்குக் காரணம் லெட்சுமி விதவையாகி விடக் கூடாதேங்கிறது தான்.''

''சுதந்திரம் வராமல் இன்னும்எத்தனையோகிராமங்கள் இருக்கு. ஊருக்கு ஒருத்தன் வெள்ளைக்காரனைப்போல் இன்னமும் இருக்கிறான்.''

''என்னதைரியம்இருந்தா ஆத்திலே இறங்கி நீச்சலடிப்பே. மேனேஜருக்கு நீச்சலடிக்கத் தெரியாது. அவருக்குத் தெரியாததை இன்னொருத்தர் செய்றதைப்பார்த்தா தொலைச்சுப்புடுவாரு. ஆத்திலே குளிக்கணும்னு ஆசையா இருந்தா வாளியிலே தண்ணி எடுத்து வச்சுக்கிட்டு சொம்பாலே ஊத்திக் குளி''

வசன முத்திரைகள் படத்திற்கு மெருகூட்டுகின்றன.

## நடிப்பே இல்லை

விஜயன், சரத்பாபு, சாருஹாசன், சுந்தர், சாமிக்கண்ணு, டிரைவராக வரும் பூபதி, சாந்தாராம், காஞ்சி எஸ். கே. ரங்கமணி,வெங்கட்ராமன் அஸ்வினி, மதுமாலினி, சாருலதா, சி. டி. ராஜகாந்தம், பிரேமி, பத்மா ஆகியோர் நடித்திருப்பதாகக் கூறுகிறார்கள், யாரும் நடிக்கவில்லை-கதாபாத்திரங்களை வாழவைத்திருக்கிறார்கள் என்பது தான் உண்மை!

மகேந்திரன் காவியம் படைத்திருக்கிறார் என்றால் ஒளிப்பதிவாளர் அசோக்குமார் கண்களுக்கு விருந்தாக வண்ண ஓவியமாக வழங்கியுள்ளார்.

இளையராஜா இசையமைப்பில் கண்ணதாசன், கவிஞர் முத்துலிங்கம், எம். ஜி. வல்லபன், இளையராஜா ஆகியோர் எழுதிய பாடல்கள் செவிக்கு விருந்து படைக்கின்றன. குறிப்பாக ரீ ரிக்கார்டிங் பிரமாதம்.

**கவிதையை, காவியத்தைப் படமாக்கலாம்! ஒரு படத்தையே கவிதையாக காவியமாகப் படைக்க முடியுமா?**

**''முடியும்'! என்பதற்குச் சான்று 'உதிரிப்பூக்கள்!'**

**'திறமையில் எவருக்கும் நாம் சளைத்தவரில்லை' என்பதை நிரூபித்து, திரைப்பட வரலாற்றில் மகேந்திரன் ஒரு திருப்புமுனையை ஏற்படுத்தியுள்ளார்.**

மொத்தத்தில்..-

**'உதிரிப் பூக்கள்' மனத்தில் உதிராது நிலைத்து நின்று மணம் பரப்பும் பூக்கள்!**

''முருகாலயம்'' உறுப்பினர்தின விழாவில் இளையராஜாவிற்கு கோ-ஆப்டெக்ஸ் தனி அதிகாரி கருப்பண்ணன் சிறந்த இசையமைப்பாளருக்கான ''தேவர் விருது'' வழங்குகிறார்.

## 'ஒப்பந்தம்' படத்தில் புலவர் மாரி பாடல்

கருடா பிலிம்ஸ் தயாரிக்கும் 'ஒப்பந்தம்' வண்ணப் படத்தில் புலவர் மாரி எழுதிய பாடல் மலேசியா வாசுதேவன் பாட, இளையராஜா இசையமைப்பில் ஒலிப்பதிவு செய்யப்பட்டது.

என். ஆர். அமுதா தயாரிக்கிறார், விஜயகணேசன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

## 'சந்தன மலர்கள்'

நாகவேளாங்கன்னி மூவிஸ் என்னும் புதிய பட நிறுவனத்தினர் 'சந்தன மலர்கள்' என்ற பெயரில் சுதாகர்-ராதிகா ஜோடியாக நடிக்கும் புதிய வண்ணப் படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர்.

சுதாகர்-ராதிகா ஜோடியுடன் அம்பிகா, சுபாஷிணி ஆகியோரும் நடிக்கின்றனர். கதையை ராகமாலிகா என்னும் புதிய எழுத்தாளர் எழுத நாவலாசிரியை இந்துமதி திரைக்கதை வசனம் எழுதுகிறார்.

கண்ணதாசன், கங்கை அமரனின் பாடல்களுக்கு கங்கை அமரன் இசையமைக்கிறார். ஒளிப்பதிவுப் பொறுப்பை ராபர்ட் ராஜசேகரன் ஏற்றுள்ளார்.

நம்நாடு அப்னாதேஷ் போன்ற பல தமிழ் இந்திப்படங்களை இயக்கிய டைரக்டர் ஜம்புவின் மகனும், பாரதிராஜாவின் அசோசியேட் டைரக்டருமான ராமு இப்படத்தின் மூலம் டைரக்டராக அறிமுகமாகிறார்.

## நாவலர் துவக்கும் அண்ணா இலக்கியக் கழகம்

தஞ்சை, அக். 28- அண்ணா தமிழ் இலக்கியக் கழக (மேற்கு) தஞ்சை மாவட்டக் கிளையின் தொடக்க விழா 30-ந் தேதி காலை 9.30 மணிக்கு தஞ்சை ராமநாதன் மன்றத்தில் நடக்கிறது.

என். எஸ். இளங்கோ தலைமையில் டாக்டர் நாவலர் தொடங்கி வைக்கிறார். புலவர் புலமைப்பித்தன் எம். எல். சி. கவிஞர் முத்துலிங்கம், இல. ராசாராமன், கு. தங்கமுத்து, புலவர் இரா. பழனிச்சாமி, சாமிதவிடன் கந்தசாமி மற்றும் பலர் பேசுவர்.



## இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகம்

சென்னை,தெற்கு வட்டம், இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின், (Archaeologist) சூப்பரின்டென்டெண்ட் அவர்களால், வடஆற்காடு மாவட்டம், வேலூர், கோட்டையிலுள்ள பாதுகாக்கப்பட்ட பகுதியைச் சுற்றிலும் வேலி அமைப்பதற்கு பொருள்கள் சப்ளை செய்வதற்கான முத்திரையிட்ட இனவாரி டெண்டர்கள் அங்கீகரிக்கப்பட்ட மத்திய பொதுப்பணித்துறை பொதுப்பணித்துறை, மின்சார இலாகா மற்றும் பொதுத்துறை நிறுவனங்களைச் சேர்ந்த காண்ட்ராக்டர்களிடமிருந்து 12-11-79 பிற்பகல் 3-மணிவரை பெற்றுக்கொள்ளப்பட்டு, அதே தினம் பிற்பகல்3-15மணிக்கு திறக்கப்படும். சப்ளை செய்யப்படவேண்டிய பொருள்களின் மதிப்பு சுமார் ரூபாய் 19,600- டேவணித் தொகை ரூபாய் 490 டெண்டர்களுடன் டேவணி தொகை டிபாஸிட்டை குறிப்பிட்ட பாரத்தில் செலுத்தாமல் வரும் டெண்டர்கள் முழுவதுமாக நிராகரிக்கப்படும். டேவணித்தொகையை தொல்பொருள் சூப்பரின்டெண்ட் (Archaeologist) அவர்கள் சார்பில் செலுத்த வேண்டும். டெண்டர் பத்திரங்கள் மற்றும் நிபந்தனைகள் ஆகியவை மேற்படி அலுவலகத்திலிருந்தோ அல்லது கன்ஸர்வேஷன் அஸிஸ்டெண்ட் அலுவலகம்/ சீனியர் கன்ஸர்வேஷன் அஸிஸ்டெண்ட், இந்திய தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகம் வேலூர் கோட்டை விலாசத்தில் 9-11-79 தேதி வரை எல்லா அலுவலக நாட்களிலும் பிற்பகல் 3 மணிக்கு முன்னதாக ஒவ்வொன்றுக்கும் ரூ. 20/-வீதம் (திருப்பியளிக்கப்படமாட்டாது) செலுத்தி பெற்றுக்கொள்ளலாம்.

davp-511 (114)/79






தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275. அவ்வைசண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி.